# மொழியியல் கலைச்சொல்லகராதி

## Glossary Of Technical Terms Of Linguistics


## டாக்டர் சு.சக்திவேல்





**வள்ளுவர் வள்ளலார் வட்டம்**

மின்னிய தொகுப்பு

காஞ்சி கந்தவேல் சுப்ரமணியன் - ஏ9வானொலி

# A

Ablaut = உயிரேற்றம், உள்ளுயிர்மாற்றம்

Ablative Case = நீங்கற்பொருள் வேற்றுமை

Ablative Of Motion = நீங்கற்பொருள்

Abstraction = நுண் பொருட்பேறு

Abstract Name = அருவப் பெயர்

Abstract Noun = அருவப்பெயர்ச்சொல்

Accent = ஒலியழுத்தம்

Accepted Usage = ஒத்துக் கொள்ளப்பட்ட வழக்கு

Accidental Similarity = தற்செயலான வடிவ ஒற்றுமை

Acculturation = பண்பாட்டுப் பேறு

Accusative = இரண்டாம் வேற்றுமை

Acoustic Features = ஒலியியக்க ஒலிக்கூறுகள்

Acoustic Image = ஒலியியக்க ஒலிப்படிமம்

Acousticist = ஒலியியக்கவியலாளர்

Acoustic Phonetics = ஒலியியக்கவியல், பௌதீகஒலியியல்

Acoustic Process = கேட்புமுறை

Acoustics = ஒலியியக்கமுறை

Acoustic Spectrum = ஒலிநிறமாலை

Acoustic Technique = ஒலியியல்உத்தி

Acrophony = முதலொலி எழுத்துமுறை

Active Articulator = இயங்குறுப்பு

Active Passive Transformation = செய்வினை செயப்பாட்டு வினைமாற்றம்

Active Sentence = செய்வினைச்சொற்றொடர்

Active Voice = செய்வினை, தன்வினை

Adam S Apple = குரல்வளைமுடிச்சு

Adaptability = தழுவல்

Adaptation = தழுவல்

Adaptive Change = தழுவுகின்றமாற்றம்

Addition = கூட்டல், ஒட்டு

Addition Enunciative = ஒலித்துணைஒட்டு

Addition Formative = ஆக்கஒட்டு

Addition Zero = வெற்றொட்டு

Addition Rule = இணைத்தல் விதி

Additive Morpheme = கூட்டல் உருபன்

Addressee = கேட்பவர்

Addressor = பேசுநர்

Adjective = பெயரடை

Adjective Demonstrative = சுட்டுப் பெயரடை

Adjective Phrase = பெயரடைத் தொடர்

Adverb = வினையடை

Adverb Of Place = இட வினையடை

Abverb Of Time = கால வினையடை

Affix = ஒட்டு

Affix Derivational = தருகை ஒட்டு

Affix Noun = பெயர்ச்சொல் ஒட்டு

Affix Verb = வினை ஒட்டு

Affixation = ஓட்டுமுறை

Affixing Languages = ஒட்டுஇணைக்கும் மொழிகள்

Affricate = அடைப்புரசொலி, ஈரிடஒலி

Agent = கர்த்தா

Agentive = கருத்தாவேற்றுமை

Agglutination = ஒட்டுநிலை

Agglutinative = ஒட்டுநிலை

Agglutinative Language = ஒட்டுநிலை மொழி, ஒட்டுமொழி

Agreement = இயைபு

Air Cavity = காற்றறை

Air Molecules = காற்றுத் துகள்கள்

Air Particles = காற்றுத் துகள்

Air Stream = மூச்சோட்ட இயக்கம், மூச்சோட்டம்

Air Stream Mechanism = மூச்சோட்டப் பொறி நுட்பம்

Alienable = பிறிதின்கிழமை

Allegro Form = விரைந்தொலிவடிவம்

Allegro Pronunciation = விரைந்தொலித்தல்

Alliteration = மோனை

Allograph = மாற்றெழுத்து

Allomorph = மாற்றுருபு

Allomorph Grammatically Conditioned = இலக்கணக் கட்டுப்பாட்டு மாற்றுருபு

**Allomorph Morphologically Conditioned = உருபனியற் கட்டுப்பாட்டு மாற்றுருபு**

**Allomorph Phonologically Conditioned = ஒலிபியற் கட்டுப்பாட்டு மாற்றுநூபு**

**Allomorph Semantically Conditioned = சொல் பொருள் மாற்ற கட்டுப்பாட்டு மாற்றுருபு**

**Allomorph Zero = வெற்றுமாற்றுருபு**

**Allomorphic Change = மாற்றுருபுமாற்றம்**

**Allophone = மாற்றொலி**

**Alphabet = நெடுங்கணக்கு, வரிவடிவம், எழுத்துமுறை**

**Alphabetic Writing System = நெடுங்கணக்கு எழுத்துமுறை**

**Alpha Phoneme = ஆல்பாஒலியன்**

**Alternant Form = மாற்றுவடிவம்**

**Alternation = மாற்று**

**Alternation Change = மாற்றுவடிவமாற்றம்**

**Alveolar = நுனிநா நுனியண்ணஒலி, நுனிநாப் பல்லினம், பல்லீறு, நுனியண்ணம்**

**Alveolar Region = நுனியண்ணம்**

**Alveolar Ridge = நுனியண்ணம்**

**Ambiguity = மயக்கம்**

**Ambiguity Grammatical = இலக்கணமயக்கம்**

**Ambiguity Lexical = சொல்மயக்கம்**

**Ambiguity Transformational = மாற்றியல்மயக்கம்**

**Ambiguous Sentence = ஐயுறவுச்சொற்றொடர்**

**Amplitude = அதிர்வுவீச்சு**

Analogic Change = ஒப்புமையாக்கமாற்றம்

Analogic Form = ஒப்புமையாக்கவடிவம்

Analogous Environment = ஒத்தசூழ்நிலை

Analogy = ஒப்புமையாக்கம்

Analysis = ஆய்வுச்செயல், பாகுபாடுவகைசெய்தல், பகுப்பாய்வு

Analysis Content = உட்பொருள்பகுப்பாய்வு

Analysis Descriptive = விளக்கப்பகுப்பாய்வு

Analysis Error = பிழைப்பகுப்பாய்வு

Analysis Prosodic = ஒலியிசைப்பகுப்பாய்வு

Analytical Form = பகுப்புவடிவம்

Analytic Growth = பிரிநிலைவளர்ச்சி

Analytic Languages = பிரிநிலைமொழிகள்

Analytic Stage = பிரிநிலை

Anaphoric = கட்டுச்சொல்

Anaptyxis = உயிர்தோன்றல்

Ancestor Language = மூலமொழி, முன்னோர்மொழி

Animate = உயிருடையன

Anterior Feature = வெளியியல்பு

Anthropoid = மனிதக் குரங்கு மனிதனைப் போன்ற

Anthropoidea = ஆந்த்தோபாய்டியா(வாலில்லாக்குரங்குமனிதன்)

Anthropological Approach = மானிடவியல்அணுக்கம்

Anthropological Linguistics = மானிடமொழியியல்

Anthropological Motivation = மானிடவியல்நோக்கம்

Anthropology = மானிடவியல்

Anthropometry = மனிதஉடல்சார்ந்தஅளவை

Anthropomorphism = ஆந்த்ரோபோமார்பிஸம்

Antonym = எதிர்ப்பொருட்சொல்

Antonymy = எதிர்பொருளியல்

Anusvara = அநுஸ்வாரம்

Aorist = முக்காலத்துக்கும்உரியது

Ape = மனிதக்குரங்கு

Aphasia = பேச்சிழப்பு

Apical = நுனிநாஒலி

Apical Sounds = நுனிநாஒலிகள்

Apico Alveolar = நுனிநா நுனியண்ண ஒலி, நுனியண்ண ஒலி

Apico Alveolar Sound = நுனிநா நுனியண்ண ஒலி

Apicodentall = நுனிநாபல்லொலி

Apico Domal = நுனிநாஇடையண்ணஒலி

Apico Interdentally = நுனிநாபல்லிடைஒலி

Apocope = ஈற்றுயிர்மறைவு

Apophony = உயிர்த்திரிபு

Apostrophe = தொகுநிலைக்குறி

Appellative Verb = குறிப்புவினை

Applied Linguistics = பயன்படுமொழியியல்,
பயனாக்கமொழியியல்

Archaic = பழைய

Archaism = தொல்சொல்வழக்கு

Archimorpheme = ஆர்க்கி உருபன், அலிஉருபன்

Archiphoneme = ஆர்க்கிஒலியன்சமநிலைஒலியன்

Archisegment = அடிநிலைஎழுத்து

Areal Linguistics = வட்டாரமொழியியல்

Argot = தொழில்மொழி

Arresting Consonant = முடிமெய்

Article = சுட்டு

Article Definite = சிறப்புச்சுட்டு

Article Indefinite = சிறப்பில்லாச்சுட்டு

Articulated Process = ஒலிப்புமுறை

Articulation = ஒலிப்புஉச்சரிப்பு, ஒலிமுறை

Articulator = ஒலிப்பான்உச்சரிப்பு, ஒலிஎழுப்பி

Articulators = அசையும்உறுப்புகள்

Articulatory = ஒலிப்புமுறை

Articulatory Phonetics = உச்சரிப்பொலியியல்

Artificial Language = செயற்கைமொழி

Aspect = காலவகை, வகை

Aspirate = மூச்சொலி, மூச்சுடை ஒலி

Aspirated Sound = மூச்சுடைஒலி, மூச்சொலி

Aspiration = மூச்சு

Assimilation = ஓரினமாதல்

Assimilation Complete = முற்றிலும் ஓரினமாதல்

Assimilation Contiguous = தொடர் ஓரினமாதல்

Assimilation Distant = சேய்மை ஓரினமாதல்

Assimilation Partial = ஓரளவு ஓரினமாதல்

Assimilation Progressive = முன்னோக்கு ஓரினமாதல், முன்னோக்கிய ஓரினமாதல்

Assimilation Reciprocal = எதிர்நோக்கு ஓரினமாதல், எதிர்நோக்கிய ஓரினமாதல்

Assimilation Regressive = பின்னோக்கு ஓரினமாதல்

Assumption = ஊகம்

Asyntactic Compound = தொடரியல் தொடர்பிலாத் தொகை

Atlas = நாட்டுப்படம்

Atlas Dialect = கிளைமொழி நாட்டுப்படம்

Atlas Linguistic = மொழியியல் நாட்டுப்படம்

Attribute = அடை

Attribute Construction = அடைத்தொடர்

Attributive = அடைச்சொல்

Autributive Construction = அடைத்தொடர், பின்னடைத்தொடர்

Auditory Nerve = கேட்கும்நரம்பு

Auditory Phonetics = கேட்பொலியியல்

Automatic = இயல்பான

Automatic Alterzation = இயல்புமாற்றம், தன்னியல்மாற்று

Auxiliary Root = துணைவேர்

Auxiliary Verb = துணைவினை

## B

**Baby Talk = மழலைமொழி**

**Back = பின்**

**Back Formation = பின்னாக்கம், பின்னமைப்பு**

**Back Vowel = பின்னுயிர்**

**Base = அடி**

**Base Adjective = பெயரடை**

**Base Component = அடிப்பகுதி, அடிப்படைப்பகுதி**

**Base Form = அடிப்படைச்சொல், அடியுறுப்பு**

**Basic Allomorph = அடிப்படை மாற்றுருபு**

**Basic Concepts = அடிப்படைக் கொள்கைகள்**

**Basic Form = மூலவடிவம்**

**Basic Vocabulary = அடிப்படைச்சொற்கள்**

**Behaviour = நடத்தை**

**Bilabial = ஈரிதழ்ஒலி**

**Bilabial Fricative = ஈரிதழ்உரசொலி**

**Bilingual = இருமொழி**

**Bilingual Area = இருமொழிப்பகுதி**

**Bilingual Comparison = இருமொழிஒப்புவமை**

**Bilingual Contact = இருமொழிஉறவு**

**Bilingual Dictionary = இருமொழிஅகராதி**

**Bilingual Folklore = இருமொழிநாட்டுப்புறஇலக்கியம்**

**Bilingual Geography = இருமொழிபுவியியல்**

**Bilingual Grammar = இருமொழிஇலக்கணம்**

Bilingual Society = இருமொழி வழக்குச் சமுதாயம்

Bilinguist = இருமொழியாளர்

Bilingualism = இருமொழிவழக்கு, இருமொழியம்,

Bilingualism Purism = இருமொழித்தூய்மை

Biolinguistics = உயிர்மொழியியல்

Biology = உயிர்நூல்

Bipartite System = இருவழிப் பகுப்பு முறை

Blade Of The Tongue = நாவிளிம்பு, முன்நா

Blend = கலப்புச்சொல்

Booth = தனிஅறை

Borrowed Form = கடன்சொல்

Borrowed Phoneme = கடன்ஒலியன்கள்

Borrowing = கடன்வாங்கல்

Borrowing Cultural = பண்பாட்டு வழிக்கடன்

Borrowing Dialect = வட்டார மொழிக்கடன்

Borrowing Grammatical = இலக்கணக் கூறுகடன்

Borrowing Language = மொழிக்கடன்

Borrowing Lexical = சொற்கடன்

Borrowing Pronounciation = உச்சரிப்புக்கடன்

Bound Form = கூட்டுவடிவம், சார்புவடிவம், கட்டுவடிவம்,

Bound Morph = கட்டுருபு, சார்புரு

Bound Morpheme = புகட்டுருபன், சாரியை உருபன், சார்பு உருபன்

Boundary = எல்லை

**Boundary Dialect** = கிளை மொழி எல்லை

**Boundary Word** = சொல் எல்லை

**Bow Vow Theory** = பாவனை மொழிக் கோட்பாடு

**Breathed Sound** = குரலிலா ஒலி, மூச்சு நிறை ஒலி

**Brevity** = சுருக்கம்

**Broadcast System** = ஒலிபரப்பு முறை

**Broad Transcription** = மேற்போக்கொலி பெயர்ப்பு

**Buccal Cavity** = வாயறை

**Bundle Of Isoglosses** = கிளை மொழிப் பாகுபாட்டுக் கோடுகளின் கற்றை

## C

**Cannonical Form** = வாய்ப்பாட்டுவடிவம்வாய்ப்பாடு

**Cantonese** = கண்டோனிஸ் சீனக் கிளை மொழி

**Capital Letter** = பெரிய எழுத்து

**Cardinal Vowel** = அடிப்படைஉயிர்

**Cartography** = தேசப்படக்கலை

**Case** = வேற்றுமை

**Case Ablative** = நீங்கற் பொருள் வேற்றுமை

**Case Accusative** = சுட்டு வேற்றுமை

**Case Active** = இயங்கு வேற்றுமை

**Case Classification** = வேற்றுமைப் பாகுபாடு

**Case Comparative** = ஒப்புவமை வேற்றுமை

**Case Dative** = நான்காம் வேற்றுமை

**Case Ending** = வேற்றுமை முடிவு

Case Form = வேற்றுமை வடிவம்

Case Genitive = ஆறாம் வேற்றுமை

Case Instrumental = கருவி வேற்றுமை

Case Locative = இட வேற்றுமை

Case Markers = வேற்றுமை உருபுகள், உருபுகள்

Case Nominative = எழுவாய் வேற்றுமை

Case Purposive = நோக்கப் பொருள் வேற்றுமை

Case Sociative = உடனிகழ்ச்சிப் பொருள் வேற்றுமை

Case Vocative = விளிவேற்றுமை

Caste = சாதி

Caste Status = சாதித்தகுதி

Caste System = சாதிஅமைப்பு

Caste Theory = சாதிக்கோட்பாடு

Casual Language = இயல்பு மொழி

Casual Speech = சாதாரணப் பேச்சு

Categories Grammatical = இலக்கணக் கூறுகள்

Catalogue = அட்டவணை

Casual Verb = ஏவுவோன், இயற்றுவோன் வினை

Causative = இயக்குவினை

Causative Suffix = காரண ஒட்டு

Cave Inscriptions = குகைக் கல்வெட்டுக்கள்

Center = மைய உறுப்பு

Central = நடு

Centralised Sound = நடுவிடத்தான ஒலி

Central Dravidian = மத்திய திராவிட மொழி

Central System = அக அமைப்பு

Central Vowel = நடுவண்ணஉயிர், நடுவுயிர்

Centre = நடு

Centre Of The Tongue = இடைநா, நடுநா

Cerebral = அண்ண முடியைத் தொடல்

Civilization = நாகரிகம்

Change = மாற்றம்

Change Linguistic = மொழி மாற்றம்

Channel = செய்தி செல்லும் வழி

Channel Noise = புறவோசை

Character = சிறப்பியல்பு

Chart = அட்டவணை

Checked Consonant = வெடிப்பு மெய்யொலி

Chronology = காலக்கணிப்பு

Classical Language = செம்மொழி

Classification = பகுப்பு, பாகுபாடு, வகை, வகைப்பாடு, வகைப்படுத்துதல்

Classification Geneological = குடிவழி வகைப்பாடு

Classification Typological = அமைப்புவழிவகைப்பாடு

Clause = முற்றுத்தொடர், தொடர், பெருந்தொடர்

Click Consonant = கிளிக் மெய்

Clitic = ஒரு நிலைச்சொல், குறைச்சொல்

Closed Syllable = முடிப்புஅசை, மூடசை, மூடியஅசை

Close Vowels = அடைப்புயிர், மூடுஉயிர், அடையுயிர்கள்

Closing Morpheme = அடைப்புருபன்

Cluster = மெய்ம்மயக்கம், மயக்கம், இணைப்பு

Cluster Dissimilar = வேற்றுநிலை, மெய்ம்மயக்கம்

Cluster Final = ஈற்றுநிலை மயக்கம்

Cluster Identical = உடனிலை மெய்ம்மயக்கம்

Cluster Initial = முதல்நிலை மயக்கம்

Cluster Medial = இடைநிலை மயக்கம்

Cluster Three Consonant = மும்மெய் மயக்கம்

Cluster Two Consonant = இருமெய் மயக்கம்

Co Articulation = இணையொலிப்பு, இணைஉச்சரிப்பு

Coda = அசையீறு

Coda Of A Syllable = அசையீறு

Code = குழஉக்குறி, குறிநிலை

Codification = குறியாக்கம்

Cognates = இனச்சொற்கள், ஓரின மொழிச்சொற்கள்

Cognitive Process = புலனுணர்வுமுறை

Coined Word = உருவாக்கியசொல்

Colloquial = பேச்சு, பேச்சுவழக்கு

Colloquial Style = பேச்சுநடை

Comma = காற்புள்ளி

Comment = குறிப்பு, கருத்து விளக்கம்

Commentary = உரை

Common = பொது

Common Ancestor = பொதுத் தாய்மொழி, பொதுத்தாய், பொதுமுன்னோர்

Common Case = பொது வேற்றுமை

Common Core = பொதுக்கூறு, பொதுமையம், பொதுமயக்கம்

Common Gender = பொதுப்பால்

Common Language = பொதுமொழி

Communication = செய்திப் பரிமாற்றம், செய்தித்தொடர்பு

Communication Channel = செய்திப் பரிமாற்ற வழி

Communication Human = பேச்சுப் பரிமாற்றம்

Communication Language = மொழி வழிச்செய்தி பரிமாற்றம்

Communication Problem = செய்திப் பரிமாற்றச் சிக்கல்

Communication System = செய்திப்பரிமாற்ற அமைப்பு

Community = சமூகம்சமுதாயம்

Community Monolingual = ஒருமொழிச் சமூகம்

Community Speech = பேச்சுசமூகம்

Compactness = அங்காப்பு இயல்பு

Comparative = ஒப்பியல்

Comparative Case = ஒப்பியல்வேற்றுமை

Comparative Grammar = ஒப்பிலக்கணம்

Comparative Linguistics = ஒப்பியல்மொழியியல், ஒப்புவமை, மொழியியல்

Comparative Method = ஒப்புவமைமுறை, ஒப்பியல்முறை

Comparative System = ஒப்பியல்முறை, ஒப்பியல் அமைப்பு

Comparison = ஒப்புமை

Compensatory Lengthening = ஈட்டுநீட்சி

Competence = திறன்

Competence Linguistic = மொழித்திறன்

Complementary Distribution = துணை நிலைவழக்கு

Complete Assimilation = முழுதும் முழுக்க ஓரினமாதல்

Complete Change = முழுமாற்றம்

Complete Sentence = முற்றுத்தொடர்

Complete Verb = முற்றுவினை

Completive Verb = முடிந்தநிலை வினை

Complex = கலப்பு

Complex Form = சிக்கல் வடிவு, கலப்பு வடிவம்

Complex Phoneme = கலப்பொலியன்

Complex Sentence = கலப்புவாக்கியம்

Complex Structure = சிக்கலானஅமைப்பு

Component = உறுப்புகூறு

Component Phonetic = ஒலிக்கூறு

Componential = கூறுவகை செய்தல், பொருட்

Componential Analysis = கூற்றுஆய்வு

Compound = இணைச்சொல், கூட்டுச்சொல், கூட்டுவடிவு

Compound Form = கூட்டுவடிவம்

Compound Noun = கூட்டுப்பெயர்ச்சொல்

Compound Phoneme = கூட்டுஒலியன்

Compound Root = கூட்டுவேர்

Compound Sentence = கூட்டுவாக்கியம், கலப்பு வாக்கியம்

Compound Verb = கூட்டுவினை

Compound Verbal Participle = கூட்டுவினையெச்சம்

Compound Word = கூட்டுச்சொல்

Computer = கணக்கிகள், கணக்கிடும்பொறி

Concatenation = இணைப்புக்கூட்டல்

Concentric Isoglosses = பேச்சுமொழி எல்லைக்கோட்டின் மையக்கோடுகள், கிளை மொழிப்பாகுபாட்டு ஒருமையக்கோடுகள்

Conception = கருத்து

Concentric Language = மொழிக்கருத்து

Concentric National = நாட்டுக்கருத்து

Concentric Social = சமூகக்கருத்து

Concept Of Eye Dialect = கிளை மொழியின் எழுத்து வழக்குக்கொள்கை

Concord = அடைவு, இயைபு, தொடர் ஒற்றுமை, இயைபு

Concord Rule = பாலெண் இயைபு விதி

Conditional = நிபந்தனை வரைவுப்பொருள்

Conditional Mood = நிபந்தனைவினை

Conditional Participle = செய்யின் எச்சம், செய்யும் என்னும் வினையெச்சம்

Conditional Sound Change = வரையறுத்த ஒலிமாற்றம்

Conditional Substitution = துணைநிலை வழக்குப்பதிலீடு

Conjugation = வினைத் திரிபு முறை, வினைத்திரிபு, வினை விகற்பம்

Conjunct Consonants = கூட்டுமெய்கள்

Conjunct Form = இணைப்பு வடிவம்

Conjunctive Participle = செய்து என்னும் வினையெச்சம் செய்தென்எச்சம்

Conjunctive Particle = சேர்க்கைச் சாரியை

Connotation = குறிப்புப்பொருள்

Consonance = மெய்யொலி இயைபு

Consonant = மெய்மெய்யெழுத்து

Consonantal Cluster = மெய்மயக்கம்

Consonantal Feature = மெய்யியல்பு

Consonantal Phoneme = மெய்யொலியன்

Consonantal Quality = மெய்யொலித் தன்மை

Consonantality = மெய்இயல்பு

Constant Feature = இருப்புநிலைக்கூறு

Constituent = ஒருபகுதிஉறுப்பு, தொடர்உறுப்பு

Constituent Structure = வடிவஉறுப்பி

Constitute = உறுப்பி

Construction = அமைப்பு

Construction = சமநிலைக்கட்டு

Coordinate Construction Subordinate = பணிநிலைக்கட்டு

Construction Type = தொடர்வகை

Contamination = உறவின் மாற்றம், சார்புச் சாயல், இனச் சாயல்

Content = உள்ளடக்கம்பொருள்

Contentives = பொருள்உள்ளவை

Context = இடம், நிகழிடம், சூழல்

Context Free Grammar = கட்டற்ற இலக்கணம் சூழல் உரிமை இலக்கணம்

Context Free Rule = கட்டிலாவிதி, சூழல் உரிமை விதி

Context Sensitive Grammar = கட்டுண்ட இலக்கணம், சூழல்கட்டுப்பாட்டு இலக்கணம்

Context Sensitive Rule = கட்டுண்டவிதி, சூழல்கட்டுவிதி

Contiguos Assimilation = தொடர்ந்து ஓரினமாதல்

Continuant = தொடரொலி, இடையினம்

Contoid = மெய்ம்மையொலி

Contrast = வேற்றுநிலை, எதிர்நிலை, எதிர் நிற்குமியல்பு

Contrastive Distribution = வேற்றுநிலை வழக்கு

Contrastive Environment = வேற்றுநிலைச்சூழல்

Contrastive Feature = வேறுபாட்டுக்கூறு

Contrastive Grammar = உறழ்நிலைஇலக்கணம்

Contrastive Linguistics = வேற்றியல்மொழியியல், ஒப்புமொழியியல்,

Contrastive Pair = வேற்றுஇணை

Convention = மரபு

Convergence Areas = ஒருமுகமாகுவட்டாரம்

Conversation = உரையாடல்

Conversation Style = உரையாடல்நடை

Co Occurrence = இணைநிகழ்வுஉடன்வரல்

Co Ordinate Conjunction = இணைநிலைஅமைப்பு

Co Ordinate Construction = இணைப்பு அமைப்பு இணைத்தொடர்

Co Ordination = சேர்க்கைத்துவம், இணைத்தல்

Copula = இணைப்பு, இணைக்கும் வினை

Coronal Feature = முகட்டுஇயல்பு

Corpus = ஆய்வுப்பொருள்

Corruption = மொழிதிரிதல்

Co Variance = இணைவேறுபாடு

Co Vairation = இணைத்திரிபு

Creative Power = படைக்கும்ஆற்றல்

Creole = செயற்கைமொழி

Creolized Language = வணிகக்கலப்புமொழி

Cross Reference = எதிர்க்குறிப்புதொடரியைபு

Cultivated Speech = பண்பட்டபேச்சு

Cultural Contact = பண்பாட்டுத் தொடர்பு

Cultural Domination = பண்பாட்டுஆதிக்கம்

Cultural Culture = பண்பாடுபண்பு

Cultural Change = பண்பாட்டுமாற்றம்

Cultural Circle = பண்பாட்டுவட்டம்

Cultural Common = பொதுப்பண்பாடு

Cultural Complex = பண்பாட்டுப்பொருள்பகுப்பு

Cultural Construction = பண்பாட்டுஆக்கம்

Cultural Contact = பண்பாட்டுத்தொடர்பு

Cultural Migration = பண்பாட்டுஇடப்பெயர்ச்சி

Cultural Pattern = பண்பாட்டுக்கோலம்

Cultural Transmission = பண்பாட்டுப்பெயர்ச்சி

Cuneiform Writing System = ஆப்பு வடிவ எழுத்து முறை

Cursive Writing System = கையெழுத்து எழுத்துமுறை

Cyclic Principle = சுழல்கொள்கை

D

Data = தரவு

Data Collection = தரவுசேகரித்தல்

Dative Case = நான்காம்வேற்றுமை

Daughter Language = சேய்மொழி, இனமொழி

Dead Language = இறந்தமொழி, வழக்கிழந்தமொழி, வழக்கில்இல்லாதமொழி

Deaspiration = மூச்சொலிநீங்கிய

Declension = வேற்றுமைத்தொகை உருபேற்றல் பெயர்த்திரிபு

Decode = குறிபெயர்ப்பு

Deep Grammar = ஆழ்நிலைஇலக்கணம்புதைநிலைஇலக்கணம்

Deep Structure = உட்கிடைஅமைப்பு, உள்ளமைப்பு புதை அமைப்பு, புதைநிலை அமைப்பு, புதைவடிவுஅகஅமைப்பு

Defect = குறை

Defective Form = குறை வடிவுவடிவம்

Defective Verb = குறைவினை

Defective Word = குறைச்சொல்

Deficient Stem = குறையடி

Definite Articles = சிறப்புச்சுட்டுக்கள்

Degradation = இழிபொருட்பேறு

Delete = நீக்கு

Deletion = நீக்கம் நீக்கல்

Deletion Rule = நீக்கல்விதி

Demonstrative Adjective(Proximate) = சுட்டுப்பெயரடை

Demonstrative Adjective (Remote) = சேய்மைப் பெயரடை

Demonstrative Base = சுட்டுப்பெயரடி

Demonstrative Pronoun = சுட்டுஇடப்பெயர்

Demorcative Prosody = வரையறைஒலியிசை

Denasalisation = மூக்கினச்சாயலைஇழத்தல், மூக்கினம்நீங்கிய

Dental = பல்லொலி, நுனிநாப்பல்லினம், பல்லினம்

Dentalisation = பல்லினமெய்யாதல், பல்லினச்சாயல் பெறுதல்

Depalatalization = அண்ணச்சாயல் நீங்கிய

Dependent Clause = சார்தொடர்

Derivation = ஆக்கம்சொல்லாக்கம்

Derivational = ஆக்கநிலை

Derivational Suffio = ஆக்கஓட்டு

Derivative Morph = ஆக்கஉருபு

Derivative Nouns = ஆக்கப்பெயர்கள்

Derivatives = ஆக்கங்கள்

Derivative Suffix = செல்லாக்கஉருபு, ஆக்கப்பின்னொட்டு, ஆக்கநிலைவிகுதி

Derived Adjectives = ஆக்கப்பெயரடைகள்

Derived Adverbs = ஆக்கவினையடைகள்

Derived Form = ஆக்கவடிவம்

Derived Noun = சார்புநிலைப் பெயர்ஆக்கப்பெயர்

Derived Phrase = வருதொடர்

Descent = வழித்தோன்றல்

Descriptive Dialectology = விளக்ககிளைமொழியியல்

Descriptive Grammar = விளக்கஇலக்கணம்

Descriptive Linguistics = விளக்கமொழியியல்

Descriptive Phonetics = விளக்கஒலியியல்

Descriptive System = விளக்கஅமைப்பு, விளக்கமுறைD

Determinative = இனஞ்சுட்டி

Deviation = பிறழ்வு

Deviation Dialectal = வட்டாரமொழி பிறழ்நிலை

Deviation Grammatical = இலக்கணப்பிறழ்நிலை

Deviation Grapbological = வரிவடிவப்பிறழ்நிலை

Deviation Lexical = சொற் பிறழ்நிலை

Deviation Phonological = ஒலிபிறழ்நிலை

Deviation Semantic = மொழிப்பொருட்பிறழ்நிலை

Devoiced = ஒலிப்புடைநீங்கிய

Diachronic Grammar = வரலாற்றுஇலக்கணம்

Diachronic Linguistics = வரலாற்று மொழியியல், வரலாற்று முறை மொழியியல்

Diacritic Marks = அடையாளப்புள்ளிகள்

Diacritics = குறியீடுகள்

Diagram = வரைபடம் விளக்கப்படம்

Dialect = கிளைமொழி, பேச்சுமொழி

Dialect Prestigious = கௌரவக் கிளைமொழி

Dialect Regional = வட்டாரக் கிளை மொழி

Dialect Related = தொடர்புடைய கிளை மொழி

Dialect Social = சமூகக் கிளை மொழி

Dialect Standard = பொதுகிளை மொழி

Dialect Urban = நகரக் கிளை மொழி

Dialect Area = கிளை மொழிப்பரப்பு

Dialect Atlas = கிளைமொழி நாட்டுப்படம், கிளை மொழிப்படம், கிளைமொழி புவிப்படம், கிளைமொழி வரைபடம்

Dialect Borrowing = கிளைமொழி கடன்வாங்கல்

Dialect Boundary = கிளைமொழி எல்லை

Dialect Change = கிளைமொழி மாற்றம்

Dialect Description = கிளைமொழி விளக்கம்

Dialect Dictionary = கிளைமொழி அகராதி

Dialect Difference = கிளைமொழி வேறுபாடு

Dialect Geography = கிளைமொழி புவியியல்

Dialect Grammar = கிளைமொழி இலக்கணம்

Dialect Map = கிளைமொழிப்படம் வரைபடம்

Dialect Questionnaire = கிளைமொழிலினா ஏடு, வினாத்தாள் கிளைமொழி கேள்வித்தாள்

Dialect Society = கிளை மொழிக்கழகம்

Dialect Variations = கிளைமொழி வேறுபாடுகள்

Dialect Word = கிளை மொழிச்சொல்

Dialectology = கிளை மொழியியல்

Dialectology Comparative = ஒப்புகிளை மொழியியல்

Dialectology Descriptivc = விளக்ககிளைமொழியியல்

Dialectology Diachronic = இருக்காலக் கிளை மொழியியல்

Dialectology Structural = அமைப்புகிளை மொழியியல்

Dialectology Synchronic = ஒரு காலக்கிளை மொழியியல்

Diaphone = ஈரொலி

Diaphoneme = ஈரொலியன்

Diaphragm = உத்தி

Dictionary = அகராதி

Differentiating Environment = வேறுபட்டசூழல்

Differentiation = வேறுபடுதல்

Differentiation Over = ஒலியன்களின் மிகை வேறுபாடுதல்

Differentiation Under = ஒலியன்களின் குறை வேறுபடுதல்

Diffusion = நெகிழ்ச்சி

Diglossia = இருகிளைமொழியியல்

Ding Dong Theory = டிங்டாங்க் கோட்பாடு

Diphthong = கூட்டுயிர், கூட்டொலி, ஈரொலி சந்தியக்கரம்

Dipthongisation = சந்தியக்கரமாதல்

Directive Particle Construction = வேற்றுமைஉருபுத்தொடர்

Discontinuos = தொடர்பிலா

Discontinuous Attributive Construction = தொடரா அடைத்தொடர்

Discontinuous = தொடர்புஇல் உறுப்பு

Discontinuous Constituent = விட்டிசைஉறுப்பு

Discontinuous Sequences = அறுபட்டதொடர்

Discovery Procedure = கண்டுபிடிப்பு முறை, காணும் முறை

Dissimilation = வேறினமாதல்

Distinctive Feature = சிறப்புக்கூறு, சிறப்பியல்பு, ஒலிகளின் சிறப்பியல்பு வகைப்பாடு

Distinctive Features = ஒலிச் சிறப்புக் கூறுகள்

Distinctive Feature Analysis = சிறப்பியல்பு ஆராய்ச்சி முறை

Distribution = வழங்கு நிலை, வருமுறை, வருகை வரன் முறை

Distribution Chart = வரன்முறை அட்டவணை

Distribution Relation = வருகைத்தொடர்பு

Disyllabic = ஈரசை

Disyllable Root = ஈரசைவேர்

Disyllabic Word = ஈரெழுத்தொருமொழி

Disyllable = ஈரசைச்சீர்

Divergence = பிரிதல்

Diverse Cluster = மாற்று மயக்கம்

Dome [Hard Palate] = அண்ணம், இடையண்ணம்

Dominating Node = மேற்கணு

Donor = கொடைமொழி

Dorso Velar = கடைநா கடையண்ண ஒலி

Dorsum = முதல்பாக டை நா

Double Plural = இரட்டைப்பன்மை

Double Suffixes = இரட்டை விகுதிகள்

Doublet = இரட்டை

Doubling = இரட்டித்தல்

Dravidian Languages = திராவிட மொழிகள்

Dravidian Linguistics = திராவிட மொழியியல்

Dravidology = திராவிடவியல்

Drill = பயிற்சி

Drill Lesson = பயிற்சிப் பாடம்

Duall = இருமை

Dual Gerder = இருமைப் பால்

Dual Number = இரட்டை எண்

Dummy Subjeet = போலிஎழுவாய்

Duplicate Change = மிகைமாற்றம்

Duplication = இரட்டித்தல்

Duration = அதிர்வீச்சு காலம்

## E

Ear = செவி

Ear Inner = உட்செவி

Ear Middle = நடுச்செவி

Ear Outer = புறச்செவி

Ear Drum = செவிப்பறை

Echo Word = எதிரொலிச் சொல்

Economic Status = பொருளாதாரநிலை

Economic Variation = பொருளாதார வேறுபாடு

Economy Of Analysis = சிக்கனஆய்வு

Education = கல்வி

Efficiency = திறன்

Egressive Air = புறவுயிர்ப்புக் காற்று

Elaboration = விரிவாக்கம்

Element = தனிமம்

Elevation = உயிர்பொருட்பேறு

Ellipsis = மறைவு

Elliptical Construction = சொல்நீக்கஅமைப்பு

Embedding = உட்புகுத்தல்தொடர்தொகுப்பு

Embedding Sentence = அகப்படுக்கும் வாக்கியம்

Emphatic Expletives = அழுத்த அசைநிலைகள்

Empty Morpi = வெற்றுருபு

Empty Subject = வெற்றெழுவாய்

Empty Words = வெற்றுச்சொற்கள்

Enclitics = பிந்துநிலை

Encode = குறிநிலை

Encylopaedia = கலைக் களஞ்சியம்

Endocentric = உள்வட்டத்தொடர்

Endocentric Construction = உள்வட்டத்தொடர், அடங்குதொடர்

Entrophy = உட்கோட்டியக்கம்

Enunciative Addition = ஒலிநபச்சேர்க்கை, ஒலித்துணை

Environment = சூழல்

Environmental Range = சூழல்எல்லை

Epicene = உயர்திணைப் பன்மை பலர்பால்

Epiglottis = குரல்வளைமூடி

Episeme me = இலக்கணத் தொடர் பொருள்

Equation = சமநிலை

Equational Sentence = ஒப்புநிலைVவாக்கியம்

Equivalent = சமமதிப்பு

Ergative = பிறவினை

Error = பிழை

Error Relative = சார்புப்பிழை

Error Sampling = மாதிரிப்பிழை

Error Standard = தரப்பிழை

Error Ethnic Group = இனக்குழு

Error Ethnocentrism = இனமையக் கொள்கை

Ethnographic Collection = இனப்பரப்பு விளக்கத் தொகுப்பு

Ethnography = மனிதவினப் பரப்பு விளக்கவியல்

Ethnolinguistics = இனமொழியியல்

Ethnological Entity = பண்பாட்டுப் பொருள்

Ethnologist = மரபுஇனநூலார்

Ethnology = மரபு இனநூல்

Etymological Classification = சொற்பிறப்பியல், வகைப்படுத்தல்

Etymological Spelling = வேர்ச்சொல், சொல்லெழுத்து

Etymology = பிறப்பியல், சொற்பிறப்பியல், சொற் பிறப்பு வரலாறு

Euphemism = மங்கலவழக்கு

Euphonic Displacement Of Consonant = மெய் இடம்பெயரல்

Evaluation Procedure = மதிப்பீட்டுமுறை

Evolution = பரிணாமம்

Excavation = அகழ்வாராய்ச்சி

Excentric Construction = அடங்காத்தொடர்

Exclamation = வியப்பு

Exclamatory = வியப்பு

Exclusive = உளப்படுத்தாத் தன்மை

Exclusive Plural = உளப்படுத்தாத தன்மைப் பன்மை

Existential Sentence = உண்மைதன்மைவாக்கியம்

Exocentric = வெளிவட்டத்தொடர்

Exocentric Construction = புறவட்டத்தொடர் அமைப்பு

Expansion = விரித்தல்

Expiration = புறவுயிர்ப்பு

Explanatory Grammar = விளக்கமுறை இலக்கணம்

Expletive = அசைநிலை

Expression = சொல் உருவம்

External History = புறநிலை வரலாறு

External Sandhi = புறப்புணர்ச்சி, புறநிலைப்புணர்ச்சி

Extralinguistics = மொழியல்லாத

Extrasystematic Phoneme = புறநடைஒலியன்

Eye Dialect = எழுத்துவழக்கு, கிளைமொழி

## F

Falling = வீழ்ச்சி

Falling Diphthong = இறங்கு கூட்டு உயிர்

False Analogy = போலிஒப்புவமையாக்கம்

False Etymology = போலிசொற்பிறப்பியல்

Family = குடும்பம்

Language Family = மொழிக்குடும்பம்

Family Tree = கிளைவழிப்படம்

Fashion Of Adaptation = தழுவல்முறை

Faucal = குரல்வளை ஒலிமிடற்றொலி

Feature = இயல்புகூறு

Feminine = பெண்பால்

Field Condition = களநிலைகள

Field Investigation = களஆய்வு

Field Investigator = களஆய்வாளர்கள

Field Method = களமுறை

Field Procedure = களமுறை

Field Work = களவேலை, களஆய்வு

Figurative Language = அணி பெறு மொழி

**Figure Of Speech** = அணி

**Finite** = முற்று

**Finite State Grammars** = முடிவு நிலை இலக்கணங்கள்

**Finite Verb** = முற்றுவினை, தெரிநிலை வினை

**Flap** = வருடொலி, அடியொலி, தட்டொலி

**Flapped Consonant** = வருடொலி மெய்

**Flexion** = உட்பிணைப்பு

**Fluctuation** = உறழ்ச்சி

**Focal Area** = மூலஇடம், மையப்பகுதி

**Folk Ballads** = நாட்டுப் புறக்கதைப்பாடல்கள்

**Folk Culture** = நாட்டுப்புறப்பண்பாடு

**Folk Dance** = நாட்டுப்புற நடனம்

**Folk Etymology** = நாட்டுப்புறசொற்பிறப்பியல், புனைவாக்கம், நாட்டுப்புற அடிச்சொல்லியல்

**Folk Linguistics** = நாட்டுப் புறமொழியியல்

**Folk Literature** = நாட்டுப்புறஇலக்கியம்

**Folk Lore** = நாட்டுப்புற இலக்கியம்

**Folk Song** = நாட்டுப்புற பாடல்

**Folk Tale** = நாட்டுப்புறக்கதை

**Foreign Language** = அயல்மொழி

**Foreign Language Learning** = அயல்நாட்டுமொழி படித்தல், அன்னியமொழிகற்றல்

**Foreign Language Teaching** = அன்னிய மொழிகற்பித்தல்

**Form** = வடிவம், உரு

Formal Analysis = வடிவாய்வு

Format = சட்டம்

Formative = ஆக்கஉருபு

Formative Additions = ஆக்கஒட்டுகள்

Formative Suffix = ஆக்கஒட்டு

Form Meaning = சொல்பொருள்தொடர்பு

Correlation Formula = சூத்திரம்

Fraction Of Phoneme = ஒலிக்கூறுகள்

Fragment = எச்சத்தொடர்

Free Form = தனிவடிவு உரிமை வடிவம், தனிவடிவம், கட்டில்லா வடிவம்

Free Forms = உரிமைச்சொற்கள், தனிவடிவுகள்

Free Morpheme = தனிச்சொல்லியன், தனிஉருபன்

Free Variant = ஊசலாட்டம்

Free Variation = ஊசலாட்டம், உறழ்ச்சி கட்டிலா மாற்றம்

Frequency = அதிர்வெண் எண்ணிக்கை அளவு, விரவு

Frequency Distribution = விகிதாசார முறைப்படி வரும் வகை, விரவுப்பரவல்

Fricative = உரசொலி, உரசினம்

Fricative Consonant = உரசினமெய்

Friction = உராய்வு

Frictionless Continuant = உரசாத்தொடரொலி

Front = முன்

Front Rounded = முன்இதழ்குவி

Front Rounded High Vowel = முன் இதழ்குவி மேலுயிர்

Front Unrounded = குவியாமுன்னொலி

Front Vowels = முன்னுயிர்கள்

Full Stop = முற்றுப்புள்ளி

Full Words = நிறைசொற்கள்

Function = செயற்பாடுசெயல்

Functional Load = செயற்பாட்டுஎண்ணிக்கை, இயக்கப்பளு

Functive = செயலி

Functors = இலக்கணச்சொற்கள்

Fundamental Frequency = அடிப்படைஅதிர்வு

Future = எதிர்காலம்

G

Gathering And Collation = திரட்டலும்பகுத்தலும்

Gemination = இரட்டித்தல், இனவெடிப்பொலி

Gender = பால், திணைப்பால்

Gender Animate = உயிர்ப்பால், உயிருள்ளபால்

Gender Dual = இருமைப்பால்

Gender Feminine = பெண்பால்

Gender Grammatical = இலக்கணப்பால்

Gender Inanimate = உயிரில்பால்

Gender Masculine = ஆண்பால்

Gender Natural = இயற்பால்

Gender Neuter = பொதுப்பால்

Gender Neutral = பொதுப்பால்

Gender Noun = பால்காட்டும் பெயர், திணைப்பெயர்

Gender Suffix = பால்காட்டும்விகுதி, பால்விகுதி

Geneologica Lclassification Of Languages = இனவழி மொழிப்பாகுபாடு

Geneology = குடிவழி

Generalized Transformational Rule = பொதுமாற்றுவிதி

General Phonetics = பொதுஒலியியல்

General Phonetic Theory = ஒலியியல் பொதுக்கொள்கை

Generate = பிறப்பி, உருவாக்கு, தோற்றுவி

Generation = தலைமுறை, தோற்றுவித்தல்

Generative Capacity = உருவாக்குந்திறன்

Generative Dialectology = மாற்றிலக்கண கிளைமொழியியல்

Generative Grammar = மாற்றிலக்கணம்

Generative Phonologist = பிறப்பொலியனியலார்

Generative Phonology = பிறப்பொலியனியல், மாற்றிலக்கண ஒலியனியல், மாற்றிலக்கணஎழுத்தியல்,

Genetic Classification = மரபுவழிவகைப்படுத்தல்

Genetic Relation = இனத்தொடர்பு

Genetic Relationship = இனத்தொடர்பு

Genitive Case = ஆரும்வேற்றுமை

Geographical Area = புவியியல்பகுதி

Geographical Dialect = வட்டாரகிளைமொழி

Geographical Factors = புவியியற்கூறுகள்

Geography = புவியியல்

Germanic Sound Shift = ஜெர்மானிய ஒலிப்பெயர்ச்சி

Gerund = தொடரெச்சவடிவம்

Gesture = சைகை

Gesture Language = அடையாளமொழி, சைகைமொழி

Gingival = முன்பல்சேலீறு

Gingivals = நுனிநாப் பல்லினம்

Glide = உடம்படுமெய்

Glossary = கலைச்சொல்லகராதி

Glossematics = மொழிக்கணிதம்

Glottalic Air = குரல் வளைக் காற்றுமூச்சு

Glottalic Air Chamber = குரல் வளைக் காற்றறை

Glottalic Air Stream = குரல்வளை மூச்சோட்டம்

Glottal Stop = குரல்வளை வெடிப்பொலி, விட்டிசைத்தல்

Glottis = குரல் இதழ், குரல்வளை

Glottochronology = சொற் கோவைப்புள்ளியியல், மொழிக் காலவரையறையியல்

Government = அவாய்நிலை, ஆட்சி

Governmental Concord = ஆட்சியியைபு

Grammar = இலக்கணம்

Grammar Bilingual = இருமொழி இலக்கணம்

Grammar Context Sensitive = கட்டுண்ட இலக்கணம், சூழல் குறி இலக்கணம்

Grammar Contrastive = உறழ்நிலை இலக்கணம்

Grammar Deep = புதைநிலை இலக்கணம்

Grammar Descriptive = விளக்க இலக்கணம்

Grammar Dialect = கிளைமொழி இலக்கணம்

Grammar Diachronic = வரலாற்று இலக்கணம்

Grammar External = புறநிலை இலக்கணம்

Grammar Finite = முற்றுநிலை இலக்கணம்

Grammar Generall = பொதுநிலை இலக்கணம்

Grammar Historical = வரலாற்று இலக்கணம்

Grammar Internal = அகநிலை இலக்கணம்

Grammar Prescriptive = விதிமுறை இலக்கணம்

Grammar Surface = மேல்நிலை அல்லது புறநிலை இலக்கணம்

Grammar Traditional = மரபு இலக்கணம்

Grammar Transformational = மாற்று இலக்கணம்

Grammar Universal = அனைத்துலக இலக்கணம்

Grammar Word = சொல்லிலக்கணம்

Grammarians = இலக்கணநூலார்

Grammatical Additions = இலக்கணச் சேர்க்கைகள், இலக்கண வேறுபாடு உணர்த்துவன

Grammatical Alternations = இலக்கண மாற்றங்கள்

Grammatical Analysis = இலக்கணப் பகுப்பு

Grammatical Borrowing = இலக்கணக் கடன்

Grammatical Category = இலக்கணப் பிரிவு வகைகூறு

Grammatical Change = இலக்கண மாற்றம்

Grammatical Core = இலக்கண மையம்

Grammatical Form = இலக்கண வடிவம்

Grammatical Label = இலக்கண குறியீடு

Grammatical Meaning = இலக்கண பொருள்

Grammatical Prosody = இலக்கண ஒலியசை

Grammatical Questionnaire = இலக்கணவியல் வினாஏடு

Grammatical Relation = இலக்கண உறவுதொடர்பு

Grammatical Rule = இலக்கண விதி

Grammatical Sentences = இலக்கண வாக்கியங்கள்

Grammatical Tradition = இலக்கண மரபு

Grammaticalness = இலக்கண வயம்

Grapheme = எழுத்துவரி, வரிவடிவம், எழுத்தன்

Graphemic Systems = வரிவடிவ அமைப்புகள்

Grimm S Law = கிரீம்விதி

Groove Fricative = குழிந்துர சொலி

Groups = குழுக்கள்

Gum = அண்பல்ஈறு

H

Half Close Vowel = அரைஅடைப்புயிர்

Half Open Vowel = அரைதிறப்புயிர்

Haplology = அசைகெடல்

Hard Palate = இடைஅண்ணம்

Hard Sounds = வல்லினம்

Harmonic Sequence Of Vowels = உயிரொலிஇயைபு

**Harmony Consonant = மெய்இயைபு**

**Harmony Vowel = உயிர்இயைபு**

**Hearer = கேட்போன்**

**Height Of The Tongue = நாஉயரம்**

**Heightening Of Tongue = நாஉயர்ச்சி**

**Hesitation Form = குறைவடிவு**

**Heterogenous Societies = வேறுபட்டசமுதாயங்கள்**

**Hiatus = விட்டிசை**

**Hiatus External = புறவிட்டிசை**

**Hiatus Internal = அகவிட்டிசை**

**Hiatus Prevention Of Hieroglyphes = விட்டிசை நீக்கம் படஎழுத்துக்கள், அடையாளஎழுத்துக்கள்**

**Hieroglyphic Writing = படவெழுத்து**

**High = மேல்**

**Higher Low = மேல்கீழ், உயிர் கீழ்**

**Higher Lower = உயர் தாழ்வு**

**Higher Mid = மேலிடை உயர்இடை**

**High Pitch = உயர் இசை**

**High Tone = உயர் தொனிமம்**

**High Vowel = மேலுயிர், உயர்உயிர்**

**Historical Compative Linguistics = வரலாற்று ஒப்புவமை மொழியியல்**

**Historical Grammar = வரலாற்றிலக்கணம்**

**Historical Linguistics = வரலாற்று மொழியியல்**

Historical Phonetics = வரலாற்று ஒலியியல்

Historical Phonology = வரலாற்று ஒலியியல்

Historical Semantics = வரலாற்று சொற் பொருளியல், வரலாற்றுசொல் பொருள்மாற்றம்

Historical Spelling = வரலாற்று வழி சொல்லெழுத்து

Historic System = வரலாற்று முறை

History = வரலாறு

External History = புறவரலாறு

Internal History = அகவரலாறு

History Of Linguistics = மொழியியல்வரலாறு

Homonym = பலபொருள் ஒருசொல், திரிசொல்

Homonymy = பலபொருள் ஒருசொல்

Homorganic Nasal = ஓரிட மூக்கன், ஓரிடமெல்லினம், இனமூக்கொலி

Honorific Form = மரியாதைக்குரிய வடிவம்

Honorific Plural = உயர்வுப் பன்மை, மரியாதைப்பன்மை

Honorific Singular = உயர்வுஒருமை, சிறப்புஒருமை

Horizontal Dialect = படுக்கை வாட்ட கிளை மொழி (வட்டாரக்கிளைமொழி )

Human = உயர்திணை

Human Speech Machinary = மனிதனின் ஒலிப்பொறி

Hybrid Compound = இருவேறு மொழித் தொகை

Hybrid Language = கலப்புமொழி

Hyperbole = உயர்வுநவிற்சி

Hyperform = மிகை வடிவு

Hyper Correction = மிகைத் திருத்தம்

Hyper Urbanization = போலி ஆக்கம்

Hypothesis = எடுகோள் கருதுகோள்

Hypothetical Language = வாய்பாட்டுமொழி

I

Identical Environment = அதேசூழ்நிலை

Identification = காணல்

Identity Linguistic = மொழியியல்ஒற்றுமை

Ideogram = படவெழுத்து

Ideographs = ஓவியஎழுத்துக்கள்

Ideography = படஎழுத்தியல்

Idjolect = தனிமனிதப்பேச்சுவழக்கு

Idiom = மரபுத்தொடர்சொல்

Idiosyncracy = தனிநிலைப்போக்கு

Idiosyncracy Of Style = தனிநடைப்போக்கு

Illiterate = படியாதவர்கல்லாதவர்

Imitation = போலச்செய்தல்

Immediate Constituent = அண்மையுறுப்பு

Immediate Ambiguous = மயக்கும்அண்மையுறுப்பு

Immediate Continuous = தொடர்அண்மையுறுப்பு

Immediate Discontinuous = தொடர்பிலாஅண்மையுறுப்பு

Immediate Multiple = பன்மைஅண்மையுறுப்பு

Immediate Simultaneous = சமநிலைஅண்மையுறுப்பு

Immediate Constituent Analysis = அண்மைஉறுப்புப்பகுப்பு

Immediate Constituent Grammar = அண்மைப்பகுப்புஇலக்கணம்

Immediate Enyironment = அண்மைச்சூழல்

Immigrant = (பிறநாட்டிலிருந்துவந்து) குடியேறியவர்

Imperative = ஏவல்

Imperative Mood = ஏவல், ஏவற்பொருள்

Imperative Obligatory = கடப்பாட்டேவல்

Imperative Optional = விருப்பேவல்

Implosive = உள்வாங்கு, வெடிப்பொலி உள்வெடிப்பொலி, உறிஞ்சொலி, உறிஞ்சடைப்பொலி,

Implosive Consonant = உள்வாங்கு வெடிப் பொலி மெய்

Inalienable = பிரிதின்கிழமை

Inanimate = உயிரில்லா, உயிரல்திணை

Inclusive = தன்மைப்பன்மை உளப்பாடு

Inclusive Plural = உளப்பாட்டுத் தன்மைப் பன்மை

Incomplete Verb = முற்றாவினை

Incorporating Language = உள்ளடங்கு நிலை மொழி, கட்டிணைப்புமொழி

Indefinite Noun = பொதுப்பெயர்

Independent Clause = சாராத்தொடர்

Index = காட்டி

Indicative Mood = குறிப்பெச்சம், வினைநிலை உரைத்தல்

Indirect Object = மறைபடு பொருள்

Induction = தூண்டல்

Infinite = செய் என்னும் வினையெச்சம்

Infinitive = எச்சம், செய்வெனச்சம்

Infinitive Mood = செயல்எஞ்சுவினை

Infix = உள்ளொட்டு, இடைவிகுதி நடுவிகுதி

Inflection = சொற் பொருள் சேர்க்கை, உட்பிணைப்பு நிலை விகுதி

Inflectional Category = உட்பிணைப்பு வகை

Inflectional Increment = சாரியை

Inflectional Languages = உட்பிணைப்பு மொழிகள்

Inflectional Phrase = உட்பிணைப்புத் தொடர்

Inflectional Suffix = உட்பிணைப்பு ஒட்டு, ஒட்டு நிலை விகுதி

Inflectional System = இலக்கணம் சொல்லமைவு

Inflexion = சொல்லாட்டு இயல்நிலை விகுதி

Inflexional Stage = பிணைப்புநிலை

Informant = தகவலாளர்

Information = செய்தி

Information Theory = செய்திப் பரிமாற்றக் கொள்கை

Ingressive Air = அகவுயிர்ப்புக் காற்று

Inhalation = மேல்மூச்சு

Inherited Forms = வழிமுறையாகவந்தவடிவம்

Inherent Adjectives = இயல்புப் பெயரடைகள்

Inherent Adverbs = இயல்புவினையடைகள்

Initial = முதல்

Initial Loss = முதல்இழப்பு

Initial String = துவக்கத்தொடர்

Initiator = தூண்டுகோல்

Innovation = புத்தாக்கம்புதுமை

Inscription = கல்வெட்டு

Inscription Cave = குகைக் கல்வெட்டு

Inscription Tomb = கல்லறைக் கல்வெட்டு

Instrumental Case = கருவிப் பொருள் வேற்றுமை, கருவி வேற்றுமை

Intensity = உரப்பு

Intensive Studies = ஆழப்படிப்பு

Interdialectal = உட்கிளைமொழி

Interference = குறுக்கீடுதடை

Interference Lexical = சொல் குறுக்கீடு

Interference Morpological = உருபனியல் குறுக்கீடு

Interference Phonological = ஒலியியல்குறுக்கீடு

Interjection = உணர்வுக் குறிப்புச்சொல், வியப்பு வியப்பிடைச் சொல்

Interlude = இடைவெளி அசையிடை, இடைச் செருகல்

Internal Change = அகமாற்றம்

Internal Factors = உட் கூறுகள்

Internal Creation = உள்நிலையாக்கம்

Internal Grammar = அகநிலை இலக்கணம்

Internal History = அகநிலை வரலாறு

Internal Modification = அகநிலை மாற்றம்

Internal Reconstruction = அகநிலைஒப்பீடு, அகமீளுருவாக்கம்

Internal Sandhi = அகநிலைப் புணர்ச்சி, அகப்புணர்ச்சி, அகச்சந்தி

Internal Structure = உள்ளமைப்பு

International Phonetic Alphabet = அனைத்துலக ஒலியியல் எழுத்து

International Phonetic Association = அனைத்துலகஒலியியல்கழகம், உலகஒலியியற்கழகம்

International Technical Terms = சர்வதேச கலைச்சொற்கள்

Interpretation = பொருள் விளக்கம்

Interpretative = விளக்கப் பகுதி

Component Interpreter = விளக்குநர், மொழி பெயர்ப்பாளர்

Interrogative = வினா

Interrogative Base = வினாஅடி

Interrogative Pronoun = வினாஇடப்பெயர்

Interrogative Sentence = வினாவாக்கியம்

Interrupted Utterance = தடைப்பட்டபேச்சு

Interview = நேர்முகப்பேட்டி

Intervocalic Stop = உயிரிடை வெடிப்பொலி

Intervocal Position = இடை உயிர்நிலை

Intonation = குரலிசை, ஒலியேற்றம், சுரவிசை, தொடரிசை

Intra Dialect System = உட்கிளை மொழி அமைவு

Intransitive = செயப்படு பொருள் குன்றிய

Intransitive Verb = தன்வினை, செயப்படுபொருள் குன்றியவினை

Intuition = இயல்பு நுண்ணறிவு உள்ளுணர்வு

Intuitive Grammar = உள்ளறிவு இலக்கணம்

Inverted Order = முரண் நிழல்

Irregular = ஒழுங்கற்றது

Irregular Alternation = ஒழுங்கற்ற மாற்றம், முறையிலா மாற்றம்

Isogloss = பேச்சுமொழி, அல்லது கிளை மொழிப் பாகுபாட்டுக்கோடு, வழக்கெல்லைக்கோடு

Isogloss Bundle Of = கிளை மொழி பாகுபாட்டுக் கற்றை

Isogloss Bulges = கிளை மொழிபாகு பாட்டுப் பிதுக்கம்

Isogloss Dips = கிளைமொழி பாகுபாட்டு வளைவு

Isogloss Parallel = இணை கிளை மொழிப் பாகுபாட்டுக் கோடு

Isogloss Splitting Of = கிளைமொழி பாகுபாட்டுக் கோடுகளைச் சிதைத்தல்

Isolability = தனிப்படுத்துந் தன்மை

Isolating Languages = பிரிநிலை மொழிகள், தனிநிலை மொழி

Isolexes = தனிநிலை

Isophones = சொல் பாகுபாட்டுக் கோடு

Isosemes = ஒலி பாகு பாட்டுக்கோடு

Isolative = பொருள் பாகுபாட்டுக்கோடு

Itemfo Investigation = ஆய்பொருள்

J

Jargon = அளப்பு

Jargon Linguistics = மொழியியல் அளப்பு

Jaw = தாடை

Lower Jaw = கீழ்த்தாடை

Upper Jaw = மேல்த்தாடை

Juncture = இணைப்பு

Juncture Phoneme = இணைப்பொலியன்

K

Kernel Sentence = அடிப்படை வாக்கியம்

Kinds = வகைகள்

Kinship Terms = உறவு முறைச் சொற்கள்

Kymogram = கைமோகிராம்

Kymograph = கைமோகிராப், ஒலிஅலைகளின் அழுத்த வேறுபாடுகளைப் பதிவுசெய்யும் கருவி

L

Labial = இதழொலி

Labialisation = இதழ்ச் சாயல் பெறல், இதழ்ச் சாயல், இதழ் பற்றிய திரிபு

Labial Sound = இதழொலி, உதட்டொலி

Labio Alveolar = இதழ் நுனியண்ணம், இதழ் நுனியண்ண ஒலி

Labio Dental = இதழ் பல்லொலி, பல்லிதழ் ஒலி பல்லிதழினம்

Labio Velar = இதழ்அடி, நாப்பின்னண்ண வினம்

Laminal = பரந்த நிலை, பரந்த நாநுனி

Language = மொழி

Language Adolescent = வளர்ந்த மொழி

Language Affixing = ஒட்டு மொழி

Language Agglutinative = ஒட்டு நிலை மொழி

Language Analytic = பிரிநிலைமொழி

Language Ancestor = முன்னோர்மொழி,

Language Animall = விலங்குமொழி

Language Artificial = செயற்கை மொழி,

Language Borrowing = கடன் பெறுமொழி

Language Child = குழந்தை மொழி

Language Classical = செம்மொழி

Language Colloquial = பேச்சு மொழி

Language Common = பொது மொழி

Language Cultured = பண்பாட்டு மொழி

Language Dead = செத்தமொழி, வழக்கில்லாமொழி

Language Developing = வளரும்மொழி

Language Donor = கொடைமொழி

Language Foreign = அயல் மொழி

Language Genderless = திணை பாலில்லா மொழி

Language Gesture = சைகை மொழி

Language Link = தொடர்பு மொழி

Language Literary = இலக்கிய மொழி

Language Model = மாதிரி மொழி

Language Monosyllabic = ஓரசை மொழி

Language Primitive = பழங்குடிமொழி

Language Recipient = பெறுமொழி

Language Regional = வட்டாரமொழி

Language Sign = குறிமொழி

Language Source = கொடை மொழி

Language Spoken = பேச்சு மொழி

Language Standard = நிலை அல்லது பொதுமொழி

Language Target = இலக்குமொழி

Language Tone = தொனிமொழி

Language Written = எழுத்துமொழி

Language Achievement Scale = மொழியறி அளவுகோல்

Language Achievement Test = மொழியறிவு அளவீடு தேர்வு

Language Acquisition = மொழி கற்றல், மொழியறிவுபெறல்

Language And Culture = மொழியும்பண்பாடும்

Language Attitudes = மொழியின் பாற்பட்ட மனப்பாங்குகள்

Language Boundary = மொழி எல்லை

Language Change = மொழி மாற்றம்

Language Choice = மொழி வழக்குத்தேர்வு

Language Communication = மொழிப் பரிமாற்றம்

Language Contact = மொழித் தொடர்பு

Language Development = மொழி வளர்ச்சி

Language Difference = மொழி வேறுபாடு

Language Domination = மொழி ஆதிக்கம்

Language Efficiency = மொழியின் ஆற்றல்

Language Family = மொழிக் குடும்பம்

Language Functions = மொழியின் பாற்பட்டசெயல்கள்

Language Habits = மொழிப் பழக்கம்

Language In Society = சமூகத்தில் மொழிநிலை

Language Interference = மொழி ஊடுருவல்

Language Laboratory = மொழிக்கூடம், மொழிப் பயிற்சிக்கூடம்

Language Learning = மொழியைக் கற்றல்

Language Learning Problems = மொழிக் கல்விச் சிக்கல்கள்

Language Moderni Zation = மொழிப் புதுமையாக்கம்

Language Planning = மொழித் திட்டம்

Language Policy = மொழிக் கொள்கை

Language Problems = மொழிப் பிரச்சினை

Language Purity = மொழித் தூய்மை

Language Structure = மொழி அமைப்பு

Language Teaching = மொழிபயிற்றல், மொழிபயிற்றுவித்தல்

Language Teaching Methods = மொழி கற்பிக்கும் முறைகள்

Language Teaching Technique = மொழி பயிற்றும் முறை

Language Use = மொழிப்பயன்

Laryngealization = குரல்வளைச்சாயல்

Larynx = குரல்வளை, தொண்டை குரல் வளையிடம்

Lateral = படருங்கொலி

Lateral Fricative = மருங்குர சொலி

Lateral Retroflex Continuant = மருங்குநாமடித் தொடரொலி

Lateral Sound = மருங்கொலி

Lax = நெகிழ்வு, ஒற்றல்

Lax Articulation = இயைதல்

Lax Vowels = நெகிழ்வுயிர்

Layer = அடுக்கு

Length = நெடில் ஒலி நீட்டம்

Lenis = நெகிழ்ச்சி

Letter = எழுத்துவரி வடிவம்

Level = நிலைபடி, நிலை சமநிலை

Level Grammatical = இலக்கணவியல் நிலை

Level Linguistic = மொழியியல் நிலை

Level Morphemic = உருபனியல் நிலை

Level Phonemic = ஒலியனியல் நிலை

Level Phonetic = ஒலியியல் நிலை

Level Pitch = குரல்வளை அதிர்வுநிலை

Level Sementic = சொற்பொருளியியல் நிலை

Level Tone = தொனி நிலை

Level Levels Of Analysis = ஆய்வின்படிநிலைகள்

Levels Of Meaning = பொருள் படிநிலைகள்

Lexeme = சொல்லன் நிகண்டுவடிவு

Lexical = சொல்

Lexical Borrowing = சொற்களைக் கடன்வாங்கல்

Lexical Categories = சொற் கூறுகள்

Lexical Change = சொல் மாற்றம்

Lexical Formative = சொல்லாக்கம்

Lexical Questionnaire = சொல்லியல்வினாஏடு

Lexical Rewriting Rule = சொல்விரிப்புவிதி

Lexical Selection = சொல் தேர்வு

Lexicon = சொற்களஞ்சியம்சொல்லியல்

Lexicostatistics = சொற்கோவைப் புள்ளியியல்

Limitation = மட்டுப்பாடு

Lingua Franca = இணைப்புமொழி, பொதுமொழி

Linguist = மொழியியலாளர்

Linguistic Acculturation = மொழியியற் பண்பாட்டுப்பேறு

Linguistic Atlas = மொழிநிலைநூல்படம், மொழிபுவிப்படம்

Linguistic Borrowing = மொழிக்கடன்

Linguistic Classification = மொழியியற்பாகுபாடு

Linguistic Commonality = மொழிபியற்பொதுத் தன்மை

Linguistic Description = மொழியியல் விளக்கம்

Linguistic Distortion = மொழிச் சிதைவு

Linguistic Diversity = மொழியியல் வேற்றுமை

Linguistic Factors = மொழிக் கூறுகள்

Linguistic Field Theory = மொழியில்களக்கோட்பாடு அல்லது பரப்புகோட்பாடு

Linguistic Form = மொழிவடிவம்

Linguistic Geography = மொழியியற் புவியியல், கிளை மொழி நிலநூல்

Linguistic Idealism = மொழியியற்குறிக்கோள் நெறிகள்

Linguistic Individuality = மொழியின் தனித்தன்மை

Linguistic Interference = மொழியியல் இடையீடுகள்

Linguistic Majority = மொழிப் பெரும்பான்மையர்

Linguistic Minority = மொழிச் சிறுபான்மையர்

Linguistic Norm = மொழிச்சீர்மை

Linguistic Ontogeny = மொழியின் தோற்ற வளர்ச்சி

Linguistic Palaeontology = மொழிவழிப்பண்பாட்டாய்வு

Linguistic Pathology = மொழியியல்நோய்

Linguistic Point Of View = மொழியியல்கண்ணோட்டம்

Linguistic Pre History = மொழிமுன்வரலாறு, வரலாற்றுக்கு முன்னைய மொழிவரலாறு

Linguistic Psychology = மொழி உளவியல்

Linguistic Pylogeny = மொழி வளரியல்

Linguistic Relativity = மொழியியல் சார்புக்கோட்பாடு சார்பியியல்

Linguistic Rule = மொழிவிதி

Linguistic Sign = மொழிவடிவம்

Linguistic Substractum = புதைந்து கிடக்கும்மொழியியல்

Linguistics = மொழியியல்

Linguistic Anthropological = மானிட மொழியியல்

Linguistic Applied = பயன்படு மொழியியல்

Linguistic Comparative = ஒப்பு மொழியியல்

Linguistic Contrastive = உறழ்ச்சி மொழியியல்

Linguistic Descriptive = விளக்க மொழியியல்

Linguistic General = பொது மொழியியல்

Linguistic Historica = வரலாற்று மொழியியல்

Linguistic Mathematical = கணக்கு மொழியியல்

Linguistic Statistic = புள்ளியியல் மொழியியல்

Linguistic Structural = அமைப்பு மொழியியல்

Linkage By Context = இடவழி பிணைப்பு

Linkage By Selection = இயல்புவழி பிணைப்பு

Linking Verb = தொடர்பு வினை

Lip = உதடு, இதழ்

Lip Position = இதழ் நிலை

Lips Rounded = இதழ்குவிதல்

Lips Unrounded = இதழ் விரிதல்

Liquid = ஒழுகொலி, ஒழுகோசை, ஈரியொலி

Listening Process = கேட்டல்முறை

Literary Tamil = இலக்கியத் தமிழ்

Literary Usage = இலக்கிய வழக்கு

Loan = கடன்

Loan Blend = கடன்கட்டு, சலப்புக்கடன்

Loan Shift = கடன்பெயர்ச்சி, கருத்துக்கடன்

Loan Translation = கடன்மொழிபெயர்ப்பு

Locative Case = இடப்பொருள்வேற்றுமை

Logical Fallacy = தருக்கநிலைத்தவறு

